24th March 1961]

**Sri R. SRINIVASA IYER** : ஸார், ∴.பேப்ரிகேட்டர்ஸ் என்று லைஸெனஸ் வாங்கிக்கொண்டு இரும்பு ரா மெட்டீரில் வாங்கி ∴.பேப்ரிகேட் செய்யாமல் கம்பியாக இருந்தால இரண்டாக வெட்டி, வேறு மற்றவைகளாக இருந்தால் அப்படியே ப்ளாக் மார்க்கெட்டில் விற்றுவிடுகிறார்கள். அதனால் தான் அக்ரிகல்சரல் இம்ப்ளிமெண்ட்ஸ் கிடைக்கவில்லை. லைஸென்ஸ் வைத்திருப்பவர்கள் வாங்கும் சாமானை ∴.பேப்ரிகேட் செய்கிறார்களா என்று விசாரிக்க ஏற்பாடு செய்ய முடியுமா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : இதில் கைத்தொழில் இலாகா அப்போதைக்கப்போது பரிசீலனை செய்து வருகிறது. அது மாத்திரம் போதாது. மக்களிடத்தில் விழிப்பு வேண்டும். சட்ட மன்ற உறுப்பினர்களும் இதைப்பற்றி கண்காணித்து யாராவது தவறு செய்தால் அந்த மாதிரி ஒன்றிரண்டு கேஸ்களை அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டு வந்தால் கண்டிப்பாக நடவடிக்கை எடுத்துக்கொள்ளபபடும். அதன் மூலமாக நிலைமை மாறலாம்.

*Oil resources*

* 1066 *Q.*—Sri T. S. RAMASWAMI (on behalf of Sri T. T. DANIEL) : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether any survey was conducted to explore oil in the Kanyakumari district; and

(*b*) if so, when and the results thereof?

The Hon. Sri R. VENKATARAMAN : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

* 1067 *Q.*—Sri A. VEDARATHNAM : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) காவிரி நதியின் ஓரத்தில் எண்ணெய் வள ஆராய்ச்சி சம்பந்தமாக இந்திய சர்க்காருக்கு ருமேனிய நிபுணர்களை அளித்து உதவத் தயாராய் இருப்பதாக, அந்த நாட்டு வர்த்தக மந்திரி கூறியிருப்பதை இந்திய சர்க்கார் ஏற்றுக்கொண்டிருக்கிறார்களா ? இல்லையானால் காரணமென்ன ?

(இ) வேறு எந்த நாட்டின் உதவியாவது நமக்கு இந்த ஆராய்ச்சிக்குக் கிடைத்திருக்கிறதா ? அதன் விவரமென்ன ?

The Hon. Sri R. VENKATARAMAN : (*a*) & (*b*) The Government have no information in the matter.

**Sri A. VEDARATHNAM** : ஸார், இப்போது இந்த எண்ணெய் வள 9-30
ஆராய்ச்சியை நடத்தி வருவது எந்த நாட்டினரால் ? ருமேனிய அரசாங்கத் a.m.
தார் இந்த விஷயத்தில் நமக்கு உதவி புரிவதாகக் கோரியதை நம்மிடம் நேரே கேட்கவில்லை என்றால், மத்திய அரசாங்கத்தின் மூலமாக அணுக வேண்டிய காரணத்தால், அவர்களை அணுகி என்ன சொன்னார்கள் என்ற விஷயமாவது இந்த அரசாங்கத்திற்குத் தெரியுமா ? அவர்கள் இதைப்பற்றி ஏதாவது கேட்டு அறிந்து கொண்டார்களா ?

The Hon. Sri R. VENKATARAMAN : இப்போது காவேரி நதி பேசினிலே ஆராய்ச்சியை நம்மவர்கள் செய்கின்றார்கள். ருமேனியா அரசாங்கத்தைப் பற்றிய விவரம் இந்த ராஜ்ய சர்க்காருக்குக் கிடையாது.

Sri K. VINAYAKAM : Sir, may I know from out of the researches made so far has it ever been established that there are oil resources in the Cauvery Basin?

[24th March 1961

THE HON. SRI R. VENKATARAMAN : The hon. Member knows a little about the technicalities involved in this matter. All researches can only give indications of the possible existence of oil and there are such possibilities.

SRI N. R. THIAGARAJAN : காவேரிப் பகுதியிலே எண்ணெய் பற்றி இதுவரை ஆராய்ச்சிகள் நடந்துகொண்டிருப்பதாக கனம் அமைச்சர் சொன்னார். இதிலே நம்முடைய சர்க்காருக்குக் கிடைத்த தகவல்களைக் கூற முடியுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இதற்கு முன்பு இந்தச் சபையிலே இதைப்பற்றி 2, 3 முறை விவரங்கள் கொடுத்திருக்கிறேன். முதலிலே ஏரோநாடிக் செய்தார்கள். இரண்டாவது சீஸ்மிக் செய்திருக்கிறார்கள். இந்த இரண்டு சர்வேக்களின் பயனாக, எண்ணெய் இருக்கலாம் என்ற நம்பிக்கை இருக்கிறது. அதற்கு மேல் ஒன்றும் சொல்ல முடியாது.

SRI R. SWAMINATHA MERKONDAR : தலைவர் அவர்களே, தஞ்சை மாவட்டத்தில் காவேரிப் பகுதியில் ஏதாவது ஆராய்ச்சி நடந்திருக்கிறதா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : காவேரி பேசின் என்று சொல்வது திருச்சி, தஞ்சை எல்லாம் சேர்ந்த பகுதிகள்தான்.

SRI A. VEDARATHNAM : ருமேனியா அரசாங்கத்தார் இந்த ஆராய்ச்சியை நமக்கு இலவசமாகச் செய்வதாகச் சொல்லியிருக்கிறார்கள். அவர்கள் இந்த ஆராய்ச்சித் துறையிலே நல்ல அனுபவம் உள்ளவர்களாயிற்றே ? அப்படி இருந்தால், ஒருபுறத்திலே இந்த ஆராய்ச்சியை நடத்துவதினால் என்ன நஷ்டம் ? இதை அரசாங்கம் ஏற்றுக்கொள்ள முன்வருமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : ஆரம்பத்திலேயே நான் சொன்னேன். ருமேனியா அரசாங்கத்தார் இதிலே உதவி செய்வதற்கு என்னென்ன கண்டிஷன் கொடுத்திருக்கிறார்கள் என்பது தெரியாது. அதுபற்றிய விவரமே இந்த சர்க்காருக்கு கிடைக்கவில்லை.

SRI A. GOVINDASAMY : ஸார், கனம் அமைச்சர் அவர்கள் அநேகமாக எண்ணெய் இருக்கலாம் என்ற கருத்தைத் தெரிவித்தார்கள். முடிவாகத் தெரிந்துகொள்வதற்கு மேலும் ஏதாவது ஆராய்ச்சி செய்வதற்கு இந்த அரசாங்கம் திட்டமிட்டிருக்கிறதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : தொடர்ந்து மேற்கொண்டு வேலை நடத்தப்படும். அதற்காக டிரிலிங் போடுவதாக இப்போது திட்டம் இருந்துகொண்டிருக்கிறது.

*A person being the President of more than one Co-operative Society (Prohibition)*

* 1068 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) ஒன்றுக்கு மேற்பட்ட கூட்டுறவு சங்கங்களுக்கு ஒரே நபர் தலைவராக இருக்கக்கூடாதென்று எப்போது சர்க்கார் உத்தரவு போட்டார்கள் ?

(இ) அவர்கள்மீது எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : No, Sir. The Government have not issued any such order. But the Co-operative rules have been amended to prohibit a person from being a